# இரும்பாரம்

"வரவேற்பு— பிரமாதமானதாக இருக்க வேண்டும். அலைகடலின் ஆபத்துக்களைப் பொருட்படுத்தாது, கண்காணா இடங்களிலே சென்று, நமக்குக் கீர்த்தியையும் செல்வத்தையும் தேடித்தந்த அந்த மாவீரனுக்கு மகத்தான வரவேற்பு நடத்தி, அவன் மனம் குளிரும்படி செய்ய வேண்டும்."

"நானும் அதேதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். அவன் உலக வரலாற்றிலே இடம்பெறப்போகும் உத்தமன்! ஊர் மக்கள் அவன் பெயரைக் கேட்டமாத்திரத்தில், களிப்பால் கூத்தாடுகிறார்கள். அவனுடைய ஆற்றலைக் கேட்டு மன்னர்கள் பொறாமைப் படுகிறார்கள்; கிடைத்தற்கரிய புகழ் ஏற்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட பேருபகாரியை நாம் பெருமைப் படுத்தவும், பாராட்டவும் கடமைப்பட்டிருக்கிறோம். நமது வரவேற்பு இதுவரை இந்த மண்டலத்திலே எவருக்குமே நடைபெறாத விதமானதாகத்தான் இருக்க வேண்டும். அவன் சாமான்யனல்ல. அவன் அடைந்துள்ள வெற்றி வானவில்லல்ல; எக்காலத்திலும் நிலைத்து நிற்கக் கூடிய வெற்றி அது."

"பாவம்! ஊரைவிட்டு, உற்றார் உறவினரைவிட்டு, அலை கடலில், கலத்தில், காற்றுக்கும் சுழலுக்கும், கடலிலே தோன்றும் பல்வேறு ஆபத்துக்களுக்கும் ஈடுகொடுத்துக் கொண்டு, தொலைதூரம் சென்று, இதுவரை எவர் கண்ணிலும் படாமல், எவர் கருத்துக்கும் எட்டாமல் இருந்து வந்த பல புதிய பிரதேசங்களைக் கண்டு பிடித்து, அங்கிருந்து காட்டு மிராண்டிகளுடன் கடும் போரிட்டு வென்று, அங்கு நம் நாட்டுக் கொடியைப் பறக்கவிட்டு, அந்த நாடுகளை நமது நாட்டுக்

கொடியைப் பறக்கவிட்டு, அந்த நாடுகளை நமது ராஜ்யத்துக்குப் புதிய செல்வமாக்கினான், அந்த வீரன். எவ்வளவு தீரம், சகிப்புத் தன்மை, உழைப்பு, ஆபத்துகளை எதிர்த்தொழிக்கும் திறமை வேண்டும் – இப்படிப்பட்ட காரியமாற்ற! இவன் இணையில்லா வீரன்.''

''இலட்சிய புருஷன்! அவனுடைய ஒரே ஆவல், பிறர் கண்ணுக்குப் படாமல் உள்ள பிரதேசங்களைக் கண்டு பிடிக்க வேண்டும் என்பது. அந்த இலட்சிய சித்திக்காக அவன் தன் உயிரைக்கூட இழக்கச் சித்தமாக இருக்கிறான்.''

''மலைமீதேறி மூலிகை பறித்து வரச் சொன்னால், ஏறி இறங்கச் சிரமம் ஏற்படுமே என்பதற்காக, 'சென்றேன், தேடினேன், அங்கு மூலிகை இல்லை' என்று பொய் கூறிவிடும் புல்லர்கள், நம்மைச் சுற்றி ஏராளமாக உள்ளனர்–உண்டு கொழுத்த உருவங்கள்!''

''இல்லை என்று கூறிவிட்டால், வேறு மலை சென்று தேடு என்று கூறுவாரே எனப் பயந்து, தேடிய மூலிகைக்குப் பதிலாக ஏதேனும் ஒரு போலியைக் கொண்டு வந்து கொடுத்துவிடும் எத்தர்கள் ஏராளம்! நமது கொலம்பஸ் போலக் குவலயத்தில் எவரும் இல்லை! அவன் கர்மவீரன்! அவனை மகத்தான முறையிலே – மன்னர்கள் கண்டு பொறாமைப்படும் விதமாக – மாவீரர்களின் வெற்றி விழாக்களைத் தோற்கடிக்கும் விதமாக வரவேற்கத்தான் போகிறேன்.''

''போகிறோம் என்று கூறுங்கள்!''

''ஆமாம்! வரவேற்போம்.''

''தோட்டத்தில் விருந்து! நாட்டியக் கச்சேரி! இசை! கவிவாணர்களின் புகழ்மாலை!''

''இவ்வளவும், இதற்கு மேலும் உண்டு. அவனுக்கு வரவேற்பு வைபவம் நடக்கும்போது, நமது சபைக்கு அவனை வர வழைக்கும்போது, பொன்னாடையை மேலே விரித்து, அவனை அந்தக் கூரை வழியாக வரச் சொல்ல வேண்டும்.''

''பொன்னாடை அவனுக்கு அளிக்கலாம் என்கிறீரா?''

''அல்ல, அல்ல! பொன்னாடை பலருக்கு அளித்திருக் கிறோம். அவன் நடந்து வரும் வழியிலே, மேலே வானமல்லவா, கூரையாக இருக்கிறது! அதற்குப் பதில், பொன்னாடையை விரிப்போம்! தங்கக் கூரை! பாவம்! எத்தனை நாட்கள் திக்குத்

தெரியாத கடலில், திகைத்துப் போன தோழர்கள் தந்த தொல்லையைச் சமாளித்துக் கொண்டு, அவன் வானத்தை அண்ணாந்து பார்த்து ஆயாசப்பட்டிருப்பான்.''

''ஆமாம், 'வானமே, எனக்குக் கூரை! கடலே, என் விளையாட்டு மைதானம்' என்று எண்ணியிருப்பான்.''

''ஏன்! கடலே, என் கல்லறையோ என்று ஏங்கியுமிருந் திருப்பான். இன்பவல்லி! அவன், இந்த வரவேற்பின்போது அண்ணாந்து பார்க்கட்டும், தங்கத் துகிலை! முகில் கொண்ட வெளியைக் கண்டான்! இன்று பொன்னாடையைக் கண்டு பூரிக்கட்டும்.''

''சரியான யோசனை! நாதா! நல்ல யோசனை! பொன்னாடை தக்கதுதான்! வரவேற்பு, வைபவமாகத்தான் இருக்கும்.''

* * * *

வரவேற்பு வைபவமாகத்தான் இருந்தது. பொன்னாடை வானமென விரிக்கப்பட்டது. பூரிப்புடன், அதன்கீழ் பவனி வந்தான், கொலம்பஸ். இந்த மகத்தான வரவேற்பு நடத்தி அவனைச் சபைக்கு அழைத்து, பக்கத்தில் ஆசனம் தந்து பாராட்டி அவனுடைய பெரும் புகழுக்கு இராஜ முத்திரை பொறித்தனர், ஸ்பெயின் நாட்டு அரசரும் அரசியாரும் பொடினாண்டும் இஸபெல்லாவும். பார்சிலோனா பட்ட ணத்திலே, 1493ஆம் ஆண்டு மார்ச் 15ஆம் தேதி, இந்த வரவேற்பு நடைபெற்றது. கொலம்பசின் உள்ளம் குதூகலமடையாதிருக்க முடியுமா! அவன் பட்ட கஷ்டமத்தனையும் பறந்து போயிற்று! மன்னையும் ராணியாரையும் மனமார வாழ்த்தினான். தன் 'சேவை'யை அவர்கள் அவ்வளவு பெரியதாக எண்ணி, தனக்கு உபசாரம் செய்வது, அவர்களின் பெருங்குணத்தைக் காட்டுகிறது என்று எண்ணினான். அவனை, மன்னர் மட்டுமல்ல, நாடே வரவேற்றது! அவனுடைய புகழ் அரண்மனையில் மட்டுமல்ல; ஸ்பெயினிலே மட்டுமல்ல; வேறுபல நாடுகளிலும் பரவிற்று.

* * * *

''நமக்குக் கிடைத்திருக்க வேண்டிய பாக்கியம். மன்றாடினான். எவ்வளவோ நம்பிக்கையூட்டும் வார்த்தைகளை சொன்னான். 'மன்னா! என்னை நம்புங்கள்! மரக்கலமும் கொஞ்சம் பொருளும் கொடுத்து ஆதரியுங்கள். நான், உமக்குப்

புதிய புதிய மண்டலங்களைக் கண்டு பிடித்துக் காணிக்கை யாக்குகிறேன். கட்டுக் கதையென்று எண்ணி விடாதீர்! கிடைத்ததைச் சுருட்டிக் கொள்ள, ஏதோ வாயிலே வந்ததைப் பேசுகிறேன் என்று எண்ணாதீர்! என் ஆராய்ச்சியின் முடிவை. உமக்குத் தெரிவிக்கிறேன். என் மனதிலே பலப்பல நாட்களாக மெள்ள மெள்ள வளர்ந்து, உருவாகியிருக்கும், திட்டத்தைக் கூறுகிறேன். தயக்கம் வேண்டாம். என் தகுதி பற்றியோ சந்தேகிக்க வேண்டாம்'' என்று பலப் பல சொன்னான். நான் நம்ப மறுத்தேன். யாரோ ஓர் எத்தன் என்று ஏளனம் செய்தேன் – உன் 'மனோராஜ்யத்தை, நீயே ஆண்டு அனுபவித்துக் கொள் – எனக்கென்று ராஜ்யமும் இருக்கிறது. யாரை நம்புவது, எதைச் செய்வது என்பதைத் தெரிந்து கொள்ளும் அறிவும் இருக்கிறது என்று ஆணவத்தோடு அனுப்பி விட்டேன். இப்போது எனக்கு வெட்கமாகவே இருக்கிறது; அந்த வீரன் விருது பெற்றுத் திரும்பினான். பெர்டினாண்டு பேருபசாரம் செய்தானாம். பொன்னாடை விரித்தனராம். கொலம்பஸ், அந்த வரவேற்பின் போது, என்னை எண்ணி ஏளனம்கூடச் செய்திருப்பான். அவன் கண்டுபிடித்த புதிய ராஜ்யம், ஸ்பெயினுக்குச் செல்வத்தையும், செல்வாக்கையும் தரும்; வியாபாரத்திலேயும் இலாபம் கிடைக்கும். அவ்வளவு தொலைவிலே. ஒரு ராஜ்யத்தை அமைப்பது என்றால், எவ்வளவு இரத்தம் கொட்ட வேண்டும் படை வீரர்கள்! ஸ்பெயினுக்கு, ஒரு இலட்சிய வீரனின் தயவால், ராஜ்யம் புதிதாகக் கிடைத்திருக்கிறது. அங்கே, என்னென்ன செல்வம் கிடைக்குமோ யாரறிவார்கள்! வெற்றி பெற்ற கொலம்பசை இலாப மடைந்த பெர்டினாண்டு, மேலும் உற்சாகப்படுத்தி, மேலும் பல புதிய இடங்களைக் கண்டுபிடித்து, ஸ்பெயினுக்குத் தரும்படி கூறுவான். ஸ்பானியக் கொடி பறக்கிறது, அட்லாண்டிக் கடலுக்கு ஸ்பானியக் கொடி பறக்கிறது, அட்லாண்டிக் கடலுக்கு அப்புறமுள்ள தேசத்தில் – என் கொடி பறந்திருக்க வேண்டிய இடத்தில்! ஏமாளி நான்; கொலம்பஸ் வந்தபோது, விரட்டினேன். பெர்டினாண்டு புத்தியுள்ளவன்! கொலம்பசைக் கொண்டு, கண்காணாத இடத்திலேயும், தன் கொடி பறக்கச் செய்து கொண்டான்'' என்று பல மன்னர்கள் எண்ணி ஏங்கினார்.

* * * *

கொலம்பசின் கண்களுக்கு, குதூகலத்தோடு வரவேற்கும் மக்கள் – கைலாகு கொடுத்து கௌரவித்த அரசனும் அரசியும், பொன்னாடை, விழா இவைமட்டுமல்ல – இவைகளைக் கண்டு

கொண்டிருக்கும்போதே. மெல்லிய ஓர் திரையில், எங்கு நோக்கினாலும் ஒரே கடல் மயம்! பெரும்புயல்! தாக்கவரும் திமிங்கலம்! தன்னை எதிர்க்கும் கலத்தாட்கள்! காட்டுமிராண்டிக் கூட்டம்! ஆகிய காட்சிகளும் தோன்றின – ஒரு கணம். அந்தக் காட்சி மட்டுமல்ல, பலரிடம்; காகிதச் சுருணையைப் பிரித்து, நேர்க்கோடுகள், வளைவுகள் ஆகியவற்றைக் காட்டிக் காட்டி விளக்கம் கூறுவது, அதனை அலட்சியமாகக் கேட்டுவிட்டு, ஆணவத்தோடு சிரித்துவிட்டு, 'எடுத்துச் செல் இந்த ஏடுகளை' என்று உத்தர விட்டுவிட்டுச் செல்லும் சீமான்கள், மன்னர்கள், கையைக்காட்டி, 'போகிறான் பார் பித்தன்! புதிய பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கப் போகிறானாம்' என்று ஏளனம் செய்வதுபோன்ற காட்சிகளும் தெரிந்தன – ஆனால் மறுகணம் அவை மறைந்தன – எதிரே, ஸ்பெயின் நாட்டரசரும் அரசியும் புன்னகையுடன் வீற்றிருக்கிறார்கள் – மேலே பொன்னாடை – சூழ நிற்கிறார்கள் வரவேற்பளிப்போர் – விருந்து நடைபெறுகிறது – இவைகள் தெரிந்தன – கொலம்பசின் மனதிலே மகிழ்ச்சி பொங்கிற்று – கண்களிலே, நீர்த்துளிகள் தோன்றித் தவழ்ந்தன.

'கொலம்பஸ் வாழ்க! அலைகடலில் அஞ்சாது சென்று புதிய உலகைக் கண்ட வீராதி வீரன் கொலம்பஸ் வாழ்க!' மக்களின் முழக்கம்– பல ஆண்டுகள் பட்ட கஷ்டத்துக்குப் பரிசு! ஆனந்த அறுவடை!!

'கனவு காண்கிறான்' – என்றே நண்பர்கள்கூட எண்ணினர். கொலம்பசின் திட்டம், யாருக்குமே, முதலில் நம்பிக்கையூட்டுவதாகத்தான் இராது. அட்லாண்டிக் பெருங் கடலைத் தாண்டி, பெரியதோர் பிரதேசம் இருக்கிறது – திசை தெரியாததாலும், போதுமான ஆராய்ச்சி இல்லாததாலும் அந்தப் பிரதேசங்களை இதுவரை யாரும் சென்று பார்த்ததில்லை. யாரும் சென்று பார்க்காததாலேயே, அங்கு ஏதும் இல்லை–என்று முடிவு செய்துவிட்டனர். அவர்கள் முடிவு தவறு! நான், அந்தத் தவறை உலகுக்கு விளக்கப் போகிறேன் – அந்தப் புதிய பிரதேசத்தைக் கண்டு பிடிக்கப் போகிறேன் என்று கொலம்பஸ், ஆர்வத்துடன் பேசினான். பெரியவர்கள் கண் சிமிட்டினர் – பெண்கள் உதட்டை அசைத்தனர் – வாலிபர்கள் கைகொட்டிச் சிரித்தனர்.

கொலம்பஸ், மிகச் சாதாரண குடும்பத்தில் பிறந்தவன். குறிப்பிடத்தக்க சம்பவம் எதுவும் அவனுடைய இளமையின் போது நடந்ததில்லை. அவன் உள்ளத்திலே, உலகப் போக்கையே

மாற்றி அமைக்கக்கூடிய ஓர் திட்டம் உருவாகிக் கொண்டிருக் கிறது என்று எண்ணும்படியான நடவடிக்கைகளும் அவனுடைய இளம் பருவத்திலே கிடையாது.

அவன் உடன் பிறந்தானொருவன்; பார்த்தலோமியோ எனும் பெயருடையான், மரக்கலக்காரருக்கு உபயோகமாகும் படங்கள் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தான். லிஸ்பன் நகரில்.

கொலம்பஸ் ஒரு பிரபல இத்தாலியக் கடற்படை அதிகாரியின் மகளைக் கலியாணம் செய்து கொண்டான். அதனால் கடல் மார்க்கம், தொலைவிலுள்ள தீவுகளின் வரலாறு, வாணிபம் போன்ற துறைகளைப் பற்றிய கருத்து வளர வழி பிறந்தது.

இந்த இரு தொடர்புகளைக் கொண்டு, உலகம் புகழும் செயலைச் செய்துவிட முடியாது. எனினும், கொலம்பசின் மனதிலே, இந்தத் தொடர்புகளின் காரணமாக, புதிய நாடுகளைக் கண்டறிய வேண்டும் என்று ஆவல் பிறந்தது. அதற்கான ஆராய்ச்சியில் ஈடுபட்டான். எத்தனை இரவுகள் தூக்கம் வராமல் புரண்டானோ! எத்தனை நாட்கள், ஊன் மறந்து உள்ளத்தோடு போராடினானோ அவன் மனதிலே, மாபெருந் திட்டம் உருவாவதற்குள், விவரிக்க முடியாத புயலும் தென்றலும் மாறி மாறிக் கிளம்பித்தான் இருக்கும்.

அசைக்க முடியாத நம்பிக்கை பிறந்துவிட்டது, கொலம் பசுக்கு. அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து சென்றால், புதிய நாடுகளைக் காணமுடியும் என்ற நம்பிக்கை. இதனை அவன் முதலிலே கூறியபோது பலரும் நையாண்டி செய்தனர்; கொலம்பஸ் மனம் ஒடிந்து போகவில்லை. மேலும் மேலும் அதனையே கூறினான், பலரிடம்; பன்னிப் பன்னி கெஞ்சினான் தன்னை நம்பும்படி; வேண்டிக் கொண்டான், தன் திட்டத்தை பரீட்சித்துப் பார்க்கும்படி; போடா பைத்தியக்காரா! உள்ள உலகம் போதும்—நீ ஒன்றும் புதிய உலகத்தைக் கண்டுபிடிக்க வேண்டாம்! —என்று கேலி செய்தனர் பயல், பலே அண்டப் புளுகன்! ஆயிரமாயிரம் தடவை கடற் பயணம் செய்தவர் களெல்லாம் கூறாததைக் கூறுகிறான், தைரியமாக!

அட்லாண்டிக் கடலைத் தாண்டிச் சென்றால். அற்புதமான பல நாடுகள் உள்ளனவாம்—யாரும் காணாதவைகளாம் — அளக்கிறான் கதை! — என்று அலட்சியமாகப் பேசினர்.

கொலம்பஸ், சலித்துப் போகவில்லை. சொல்லிக் கொண்டே இருந்தான் – கெஞ்சிக் கேட்டுக் கொண்டே இருந்தான் – யாராவது ஒருவர் தன் வார்த்தையிலே நம்பிக்கை கொள்வார்கள் என்ற எண்ணத்தை அவன் கைவிடவில்லை.

அரசுகளை விரிவாக்கிக் கொள்ளவும், செல்வத்தைப் பெருக்கிக் கொள்ளவும், ஆவல் கொண்ட மன்னர்களிடம் சென்றான். கொலம்பசின் திட்டம், வெறும் கனவு – அல்லது எத்தனின் ஏற்பாடு – அல்லது பித்தனின் உளறல் என்றே எவரும் கருதினர்.

ஜினிவா குடியரசுக்காரரிடம் கூறிப் பார்த்தான். போர்ச்சுகல் மன்னரிடம் பேசிப் பார்த்தான்; பிரிட்டிஷ் மன்னருக்குச் சேதி அனுப்பிப் பார்த்தான்; எங்கும் ஏளனம். அலட்சியம், இவைகளே பதிலாகக் கிடைத்தன.

ஸ்பெயின் அரசரிடம் கூறுவோமென்றெண்ணி, பலமுறை அவரைக் காண முயற்சித்தான்; சுலபமான காரியமா? கொலம்பஸ் என்ன கொற்றவனா! அரச தூதனா! ஆஸ்தானக் கவியா! இல்லை, ஆடலழகியா! சுலபத்திலே பேட்டி கிடைக்க?

மிகச் சிரமப்பட்டுத்தான் ஸ்பெயின் நாட்டரசன், பெர்டினாண்டை பேட்டி கண்டான்–தன் திட்டத்தைக் கூறினான்.

"மூன்று கலங்கள்! உடன் வரச் சில ஆட்கள்! கொஞ்சம் பொருள்! உமது ஆசி! இவைகளைத் தாருங்கள் – உமக்கு நான் புதிய, பெரிய ராஜயத்தைக் காணிக்கையாகத் தருகிறேன்" என்றான். மன்னனுக்கு, எப்படியோ, ஒருவித நம்பிக்கை பிறந்தது. "அங்ஙனமே! நீ ஏதேனும் புதிய ராஜ்யத்தைக் கண்டு பிடித்தால், உன்னையே தளபதியாக்குகிறேன் – அந்தப் புதிய ராஜ்யத்தின் வருவாயிலே, பத்திலோர் பாகம், உனக்குப் பரம்பரையாக அனுபவிக்கும் உரிமை தருகிறேன். வெறுங்கையுடன் திரும்பினால், பரிசுமில்லை. . ." என்றான் பெர்டினாண்டு. கனவு உலகிலிருந்து நிஜ உலகு வந்தவனானான் கொலம்பஸ்.

கலங்கள் கிளம்பின! கண்களிலே ஆர்வ ஒளி வீசிற்று! கலங்கள் சென்றன, நெடுந்தூரம்–கண்ணுக்கெட்டிய தூரம், கடலேதான்! வழக்கமாகக் கடற்பயணம் செய்யும் போதும், வாணிபத்துக்காகப் போகும்போதும் காணக் கூடிய பிரதேசங்களெல்லாம் மறைந்துவிட்டன! தொலைவில், பெரியதோர் பூபாகம் இருக்கிறது! வாருங்கள், காட்டுகிறேன்! என்

கணக்குப் பொய்யல்ல! என் திட்டம் கனவல்ல! என் முயற்சி வீண்போகாது!'' என்று ஆவேசத்துடன் பேசுகிறான். கண்ணெதிரே கடலன்றி வேறு காணாத உடனிருந்தோரின் உள்ளத்தில் சலிப்பு, வெறுப்பு, திகில், கோபம் கொப்பளித்தது.

'இவனோர் பித்தன்' என்றனர் அவர்களும்.

அந்தப் பித்தன் மனதிலே மட்டும் இருந்த உலகம்தான், இன்று உலகினர் கண்டு அதிசயிக்கும், அமெரிக்கா கண்டம்.

எதற்கும் அஞ்சாமல், சென்றான்; அதோ ஓர் இடம்! தரை! நிலம்! பிரதேசம்! ராஜ்யம்! – ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகப் பெயரிட்டுக் கூவினர். களித்தனர். கூத்தாடினர். ''பித்தன்! நான் பித்தன்! அல்லவா!'' என்று கேட்டது, கொலம்பசின் பார்வை. கொலம்பஸ், தான் கண்டு பெயரிட்டு, அங்கு, ஸ்பெயின் நாட்டுக் கொடியை நாட்டினான்! வெற்றி தந்த உற்சாகத்தால், மேலும் தொடங்கினான் பயணத்தை! வேறு பல இடங்கள்! புதிய புதிய தீவுகள்! எல்லாம் ஸ்பெயினுக்குச் சொந்தமாக்கினான். ஸ்பெயினுக்குக் கொடி பறந்தது, ஸ்பெயினுக்கு வெகு தொலைவில்! ஸ்பெயினுக்கு புதிய புதிய ராஜ்யங்கள் கிடைத்தன – ஸ்பானிய அரசன் காணாத தேசங்கள்! உலகப் படத்திலே அதுவரை குறிக்கப்படாத நாடுகள்! கற்பனைக்கு எட்டாமலிருந்து வந்த தேசங்கள்; அங்கெல்லாம் ஸ்பானிஷ் கொடி! அந்த இடங்கள், இயற்கை அழகும் செல்வமும் நிரம்பிய இடங்கள். எதிர்ப்புகள் இருந்தன! கொலம்பஸ், அவைகளைச் சமாளித்தான்.

பிறகு, திரும்பினான்! வெற்றிக் களை முகத்தில் தாண்டவமாட, கண்டு பிடித்த நாட்டப் பொருட்குவியல் கலத்திலோர் பகுதியில் இருந்தது; அந்த நாட்டு மக்கள் சிலரையும் அழைத்து வந்தான்.

இந்த அற்புதமான வெற்றிக்குப் பிறகுதான், அரசன் பெர்டினாண்டும், அரசி இஸபெல்லாவும், கொலம்பசுக்கு மகத்தான வரவேற்பளித்து, தம்முடன், சரிசமமான ஆசன மளித்து, கொலம்பசைக் கௌரவித்தனர். பொன்னாடைமேலே விரித்து, அதன் நிழலில் அவன் நடந்து வரும்படி செய்தனர். பல நாடுகளிலே அவனுடைய புகழ் பரவிற்று அவனைப் பித்தனென்றும் எத்தனென்றும் கேலி பேசியும் கண்டித்தும் வந்தவர்கள் வெட்கினர்; வெற்றி வீரனாக விளங்கினான் கொலம்பஸ்.

* * * *

''எவ்வளவு அலட்சியப் படுத்தப்பட்டாலும், ஏளனத்துக்கு ஆளானாலும், எடுத்த காரியத்தை முடித்தே தீருவது என்ற திடசித்தமும், விடா முயற்சியும் இருந்தால், வெற்றி கிடைத்தே தீரும். தூற்றினோரே துதி பாடி நிற்பர். ஏளனம் பேசினோர், ஏத்தித் தொழுவர்! சந்தேகமிருப்பின், கொலம்பசின் இன்றைய நிலையைப் பார். மன்னர், அவனைத் தன் நண்பனென்று கூறி மகிழ்கிறார். ஸ்பானிஷ் மண்டலம் அவனைப் போற்றுகிறது. மாநிலமே அவனைப் புகழ்கிறது.'' என்று பலரும் கூறினர்.

கொலம்பஸ், தன் திட்டம் வெற்றி பெற்றதற்குக் காரணம் வேந்தன் தன்னிடம் காட்டிய ஆதரவுதான் என்பதைக் கூறிப் பூரித்தான். ஒருவன் திறமைசாலியாக இருக்கலாம். அபூர்வமான ஆராய்ச்சியாளனாக இருக்கலாம்; ஆனால் அவன் வெற்றிபெற, அந்த வெற்றியினால் பலரும் நன்மை பெற, யாரேனும் கருணை உள்ளம் படைத்த ஒருவர், அவனுக்குத் தக்க சமயத்திலே, 'கை கொடுத்து' உதவமுன்வர வேண்டும்; இல்லையேல் அவனுடைய திறமை காட்டு மலராகும் – மீட்டுவாரற்ற வீணையாகும் – 'என் இன்பக் கனவு பலித்ததற்குக் காரணம், தக்கார்க்குத்தக்கது செய்யும் தன்மை வாய்ந்த மன்னனின் உதாரணம்தான்' – என்று எண்ணி மகிழ்ந்தான்.

பெற்ற வெற்றியுடன் திருப்தி அடையவில்லை–இவை இனிப் பெறவேண்டிய பெரு வெற்றியின் அடையாளங்கள் என்று கூறி மீண்டும் மன்னன் ஆணை பெற்று, மரக்கலம் ஏறினான்– மேலும் பல புதிய நாடுகளைக் கண்டறிய இம்முறை, கொலம்பஸ் கிளம்பும்போது, அரச குடும்பமே தன்னை ஆசி கூறி அனுப்பிடக் கண்டு மகிழ்ந்தான். முதல் தடவை சென்ற போது, ஊர் மக்களின் ஏளனம் – சிலருடைய ஆணவம் – மன்னனுடைய சந்தேகம் கலந்த அனுமதி – இவைகளே, கொலம்பசுக்குக் கிடைத்தன. 'போகிறான் பிழைக்கத் தெரியாதவன்!' என்று பேசினோர் உண்டு; பிழைக்கத் தெரியாதவனா? அவனா? பிழைக்கத் தெரிந்தவன்; அதனாலே தான் புளுகு பேசி, மன்னனையே மயக்கிப் பொருள் பெற்றுக் கொண்டு போகிறான் என்று ஏசினோர் உண்டு. கடற் கொள்ளைக்காரனாகி விடுவான் என்று ஆரூடம் கூறினர் சிலர்; கடலுக்குப் பலியாவான் என்று ஆரூடம் கூறினர் சிலர்; இரண்டாம் முறை அவன் புறப்பட்ட போதோ, எவரும் ஏளனம் பேசத் துணியவில்லை – எதிர்ப்போர் கிடையாது – அவன்

திறமைசாலி. மேலும் பல வெற்றிகள் பெற்று வருவான் என்று பாராட்டினர். நிலைமை அவ்வளவு மாறியிருந்தது – பெற்ற வெற்றியினால், கலம் சென்றது – களிப்பு, கொலம்பசுக்கு விருந்தளித்தது. மன்னனும், தன் மண்டலம் விரிவடைவது கண்டு மகிழ்ந்தான். மக்களும், தமது நாட்டுக் கீர்த்தி வளரக் கண்டுகளித்தனர். ஆனால், அனைவருமா? அல்ல, அல்ல! மல்லிகைத் தோட்டத்திலே மணம் வீசினாலும், புதரில் மறைந்திருக்கும் பாம்பின் குணம் மாறாதே! அதுபோல், ஸ்பானிஷ் மக்களில் பெரும்பாலோருக்கு, கொலம்பசின் வெற்றி, பெருமையையும், பூரிப்பையும் தந்ததென்ற போதிலும், சிலருக்குக் கோபத்தையும் பொறாமையையும் கிளறிற்று, சொன்னபடி செய்து காட்டியே விட்டானே! – என்று எண்ணினர் – கோபம் புகையலாயிற்று. பயலுக்கு, எப்படிப்பட்ட மரியாதை, வரவேற்பு! பொன்னாடையல்லவா, குடையாக அமைந்தது அவனுக்கு! கேட் பாரற்றுக் கிடந்தான் – பித்தன் போல் அலைந்தான் – இன்று பேரரசனின் பக்கத்திலே அமர்ந்தான்! – என்று முணு முணுத்தனர் – பொறாமை மூண்டது. இனி மண்டைக் கர்வம் பிடிக்கும் அவனுக்கு! இந்த மண்டலத்து மக்களை அவன் மதிக்கவே மாட்டான். மன்னனைக் கூட ஆட்டிவைப்பான்! – என்று பேசலாயினர் – கலகத்தை நடமாட விட்டனர்.

கொலம்பஸ் எந்தத் திக்குச் சென்றால், எந்தத் தீவு காணலாம் என்று கணக்கிட்டுக்கொண்டு, கலத்திலே கவலையுடன் உலவிக் கொண்டிருக்கும் நேரத்தில், பொறாமை கொண்டவர்கள், யாரிடம் எந்தவிதமான, கலகமூட்டி, கொலம்பசின் கீர்த்தியைக் கெடுத்து, அவனுக்குள்ள செல்வாக்கைக் குலைப்பது என்பதற்கான திட்டங்களைத் தீட்டலாயினர். கொலம்பஸ் கண்டானா, சுயநலச் சுறாமீன்களும், தன்னலத் திமிங்கிலங்களும், சதிச் சுழல்களும், நாட்டிலே உண்டு என்பதை. அவன் அகமகிழ்ந்து இருந்தான்! தான் பெற்ற வெற்றி கண்டு அனைவரும் பாராட்டுகிறார்கள் – உடனடியாக கீர்த்தி தனக்குக் கிடைத்தபோதிலும், உருவான பலனும், நிரந்தரமான கீர்த்தியும் நாட்டுக்குத்தானே கிடைக்கும் – இந்த நற்காரியத்தைச் செய்யக் களிம்பும் தன்மீது யாருக்குத்தான், எதற்காகத்தான் நச்சு நினைப்பு ஏற்படப் போகிறது என்று எண்ணுபவர்கள் உண்டு – எங்கும் எந்நாளிலும் என்பதை அவன் அறியவில்லை. கடலிலே அலை இருப்பதுபோல, சமூகத்திலே, நயவஞ்சகம் உண்டு என்பதை.

அவன் அகமகிழ்ந்து இருந்தான்! தான் பெற்ற வெற்றி கண்டு

அனைவரும் பாராட்டுகிறார்கள் – உடனடியாக கீர்த்தி தனக்குக் கிடைத்தபோதிலும், உருவான பலனும், நிரந்தரமான கீர்த்தியும் நாட்டுக்குத்தானே கிடைக்கும் – இந்த நற்காரியத்தைச் செய்யக் கிளம்பும் தன்மீது யாருக்குத்தான், எதற்காகத்தான் நச்சு நினைப்பு ஏற்படப் போகிறது என்று எண்ணினான். வெற்றி பெற்றதொன்றே போதும், சிலரை விரோதிகளாக்க என்பதை அறியான். கீர்த்திக் கணவாயிலே நுழையும்போது, காதகர்கள், காரணமின்றிப் பாறைகளை உருட்டி விடுவர் மேலே என்பதை அவன் அறியவில்லை. நம்மில் ஒருவன் அடையாத நிலையை இவன் அடைவதா என்று எண்ணுபவர்கள் உண்டு – என்பதை அறியவில்லை. அவன் கலத்தை மேலும் மேலும் செலுத்திக் கொண்டு சென்றான்! நயவஞ்சகர்கள் நாட்டிலே கலகத்தை மெள்ள மெள்ள ஊட்டியபடி இருந்தனர்.

கொலம்பஸ், பாக்கியசாலி!

பெர்டினாண்டு ஒரு பெருங் குணவான் – கொலம்பசுக்குக் கைகொடுத்துத் தூக்கி விட்டார்!

ஏறிய ஏணிகளைக் கீழே தள்ளிவிடும் பேர்வழிகள் உண்டு.

கொலம்பஸ், இனித் தனக்கு ஏணியே தேவையில்லை நிலை அவ்வளவு உயர்ந்து விட்டது என்று எண்ணுகிறானாம்.

கலத்திலே, அவன் காவலன் போலவே கொலுவீற்றிருக்கிறானாம்.

காட்டுமிராண்டிகள், கொலம்பசைத்தான் ஸ்பெயின் நாட்டு மன்னன் என்று நம்பிவிட்டார்களாம்.

பயல், சாமார்த்தியசாலி! புதிய பிரதேசங்களிலிருந்து ஏராளமான நவரத்னங்கள் கொண்டு வந்தான் – மன்னனிடம் ஒன்றைக்கூடக் காட்டவில்லை.

இம்முறையும் வெற்றியுடன் திரும்பினால், பிறகு அவனைக் கையில் பிடிக்கவே முடியாது.

மன்னன் மட்டுமென்ன! மண் பொம்மைதான் இனிமேல்.

அதுபோலவே பேசினானாமே கொலம்பஸ்.

ஆமாம்! குடிவெறியில்!

கொண்டுவந்த நவரத்னங்களிலே சிலவற்றைக் கூத்தாடும் குட்டிகளுக்குக் கொடுத்தானாம். ஏன் அவன் விஷயத்தைப் பேசுகிறீர்கள் – அவனால், ஸ்பெயின் நாட்டுக் கீர்த்தி வளருவதாக

மன்னர் எண்ணுகிறார் – அவனோ மன்னனின் ஆதரவைப் பயன்படுத்திக் கொண்டு தனது நிலையை உயர்த்திக் கொள்கிறான்.

சுயநலக்காரன்!

சூதுக்காரன்!

மண்டைக் கர்வி!

பேராசைக்காரன்!

அதிகார வெறியன்!

அகம்பாவக்காரன்!

காட்டிலே, இரவு வேளைகளில் புலி, ஓநாய், செந்நாய், காட்டெருமை, முள்ளம்பன்றி – இப்படிப் பலப்பல கிளம்பிச் சுற்றுமல்லவா, இரை தேடி! அதுபோல, கொலம்பஸ் ஊரிலே இல்லாதபோது கிளம்பின, மேலே குறிக்கப்பட்ட விஷப் பேச்சுகள்! ஊரெங்கும் பரவின – பலருடைய உள்ளத்தைக் கெடுத்தன – ஊராள்வோரின் மனதையும் கெடுத்தது. விஷ விவசாயிகள் பூரித்தனர். தொலைவிலே ஏதோ, பச்சென்று தெரிகிறது – புதிய தீவாகத்தான் இருக்கும் என்று எண்ணிக் கொலம்பஸ் களித்திருந்தபோது, தங்கள் கலகப் பேச்சு, இன்னின்ன இடத்திலே பரவி, இன்னின்னவரின் மனதைக் கெடுத்துவிட்டது. ஆகவே கொலம்பசுக்கு, இந்த அளவு எதிர்ப்பு ஏற்பட்டிருக்கிறது என்று கணக்கிட்டுக் களித்தனர், காதகர்.

சில புதிய இடங்களைக் கண்டுபிடித்து, அங்கெல்லாம் முறைப்படி ஸ்பானிஷ் கொடியை நாட்டிவிட்டு, மீண்டும் ஊர் திரும்பினான் கொலம்பஸ். பழைய குதூகலம் இல்லை மக்களிடம்! புதியதோர் நிலையைக் கண்டான். புன்முறுவல் இயற்கையாக எழவில்லை; பாராட்டுகிறார்கள். ஆனால் அதிலேயும் ஏதோ கேலியும் தொனிக்கிறது. பார்வையிலே ஓர் வகைப் பகைமை தெரிகிறது. கொலம்பஸ் கவலைப்பட்டான். பிறகு தெரிந்து கொண்டான், தான் இல்லாதபோது தன்னலக்காரர்கள், பொல்லாங்கு பேசி, நிலையைக் கெடுத்துள்ளனர்' என்பதை. கோபம் மூண்டெழுந்தது. செ! இவர்களும் மக்களா! எவனோ, எதற்கோ ஏதோ பேசினால் அதைக்கேட்டு நம்பி, நம்மீது கொண்ட அன்பைக் குறைத்துக் கொள்வதா? இவ்வளவுதானா, இவர்களின் குணம்! இதற்கா இவ்வளவு பாடு பட்டோம்! – என்று ஏங்கினான். மீண்டும் யோசித்தான். பாவம்! அவர்கள்

என்ன செய்வார்கள்! நயவஞ்சகர்கள், நம்மீது கொண்ட பொறாமையினால் கட்டிவிட்ட கதைகளை நம்பி ஏமாந்தனர். உண்மை அறியாததால், அவர்கள் உள்ளம் பாழ்பட்டிருக்கிறது. உண்மையை உரைக்க வேண்டும் என்று தீர்மானித்து, கலக மூட்டினோர், தன்னைப் பற்றிக் கூறிய குற்றச்சாட்டுகளை எல்லாம் தவிடு பொடியாக்கினான். மக்கள், தங்கள் தவறை உணர்ந்தனர். வீணாகச் சந்தேகித்தோம் – யார் பேச்சையோ கேட்டுக் கொண்டு கொலம்பசை நிந்தித்தோம் நயவஞ்சகர்கள் அவனைப் பற்றிச் சொல்லி வைத்த ஒரு குற்றச்சாட்டுக்குக்கூட ஆதாரம் இல்லை என்பது இப்போதல்லலவா தெரிகிறது என்று பேசிக்கொண்டனர். மாசு துடைக்கப்பட்ட மாணிக்கமானான் கொலம்பஸ். ஆனால், மக்களின் போக்கும், அந்தப் போக்கை உண்டாக்கிய பொச்சரிப்புக்காரனின் போக்கும், கொலம்பசின் மனதிலே, ஆற்ற முடியாத ஓர் புண்ணை உண்டாக்கிற்று. மனம்தானே! அவனும் மனிதன்தானே!

மீண்டும் கிளம்பினான் கொலம்பஸ், ஸ்பெயினுக்கு! நாடு தேட! ட்ரினிடாட் தீவு போன்ற பல புது இடங்களைக் கண்டுபிடித்தான் – ஹிஸ்பானியோலா என்ற பிரதேசத்தில், ஸ்பானிஷ் ஆட்சியை அமைத்தான் – அங்குக் கிளம்பிய எதிர்ப்பை அடக்கினான்.

காட்டுமிராண்டிகளின் எதிர்ப்பைத்தான் கொலம்பஸ், கடும் போரிட்டேனும் அடக்க முடியும்–கலகமூட்டுவோரின் எதிர்ப்பை என்ன செய்வது? அவர்களோ, ஸ்பெயினில் வேலை செய் கிறார்கள்; கொலம்பசோ ஹிஸ்பானியோலாவில் இருக்கிறான்.

ஸ்பெயினில், கொலம்பசுக்கு எதிர்ப்பு, சரியானபடி கிளப்பிவிட்டனர். கலகமூட்டுவோர், சரியான விசையை அறிந்து. அந்தக் காரியத்தைச் செய்தனர்.

எவ்வளவுதான் மன்னர், கொலம்பசைப் பாராட்டினாலும், அவன் திறமையைப் புகழ்ந்தாலும், அவனுடைய சேவையால், தன் ராஜ்யத்துக்குப் புகழ் கிடைத்தது என்று கூறினாலும், உள்ளூர அவர் மனதிலே, ‘‘கொலம்பஸ் இவ்வளவு கீர்த்தி பெற்றது நமது ஆதரவால்தான்! கொலம்பஸ் புதிய நாடுகளைக் கண்டுபிடித்துக் காட்டினான். பெருமைக்குரியதுதான் ஆனால், கொலம்பசை உலகுக்குக் காட்டியது யார்? நாம்தானே! நாம், அவனுடைய திட்டத்தை அங்கீகரித்து, ஆதரவு அளித்திரா விட்டால், கொலம்பஸ், பித்தன்போலப் பிதற்றிக்கொண்டு

கிடந்திருப்பான். நமது ராஜ்யம் பெரிதாகி இருக்கிறது— ஆனால் அப்போது நாம் ராஜாதானே! அவனோ, பித்தனாகவன்றோ இருந்திருக்க வேண்டும்! அவனை உலகு அறியச் செய்தது, நாம் தான்!''—என்ற எண்ணம் தவழத்தானே செய்யும். அந்த விசையை அறிந்து, பக்குவமாக வேலை செய்தனர். தந்திரம் பலித்தது.

பெர்டினாண்டினால் கொலம்பசுக்குக் கீர்த்தியா? கொலம்பசினால் பெர்டினாண்டுக்குக் கீர்த்தியா? யாரால் யார் பலன் பெற்றார்கள்? பெர்டினாண்டு கிடைத்திராவிட்டால், கொலம்பசுக்கு இந்த நிலை ஏது? கொலம்பஸ் கிடைத்திராவிட்டால், பெர்டினாண்டுக்கு புதிய ராஜ்யங்கள் ஏது?

கொலம்பஸ், பெர்டினாண்டை மதிக்கிறானா இல்லையா? பெர்டினாண்டு கொலம்பசின் சேவையையும் திறமையையும் பாராட்டுகிறானா, இல்லையா?

இருவருக்கும் உள்ள தொடர்பு நீடிக்குமா, இடையே அறுந்துபடுமா? கொலம்பஸ் வெற்றிமேல் வெற்றி பெறுவது பெர்டினாண்டுக்கு நல்லதா, கெடுதலா?

இப்படிப்பட்ட கேள்விகளைக் கிளப்பினால், எப்படிப்பட்ட தூய்மையான உள்ளம் படைத்தவர்களும் இப்பக்கமோ அப்பக்கமோ, இரண்டோர் வார்த்தை பேசாதிருக்க முடியுமா! அந்த வார்த்தைகள் அவ்வளவும், கொலம்பசுக்குக் கேடு விளைவித்தன. கொலம்பஸ் தொலை தூரத்தில் இருந்தபோது, இந்த விஷம் நன்கு பரவி, விபரீத விளைவுகளை உண்டாக்கி விட்டது.

ராணி இஸபெல்லா கொலம்பசுக்கு அளித்திருந்த அதிகாரத்தை ரத்து செய்துவிட்டார், ஒரே வரியில். கொலம்பசின் நிலை குலைந்தது. ராஜாங்க கோபம், அவ்வளவோடு முடியுமா? கொலம்பசை நீக்கிவிட்டு, அந்தப் பதவியை வகித்து, அதிகாரம் செலுத்த போவாடில்லா என்றொருவனையும் அரசியார் அனுப்பி வைத்தார்.

ஹிஸ்பானியோலாவுக்கு வந்து சேர்ந்தான் புதிய அதிகாரி – கொலம்பசை நீக்கினான். அப்போது கொலம்பசுடன், பார்த்தலோமியோவும் இருந்தான். அரசியாரின் உத்தரவுப்படி, இரு சகோதரர்களுக்கும் விலங்கிடப்பட்டது. வெற்றி வீரன் கரங்களிலே விலங்கு! எந்தக் கரங்களைப் பிடித்துக் குலுக்கி, எந்த இஸபெல்லா அரசியார் மரியாதை காட்டினார்களோ, அதே கரங்களில் அதே அரசியாரின் உத்தரவுப்படி, இரும்பாரம்!

கலம் வருகிறது ஸ்பெயினுக்கு! அதிலே கைகளில் விலங்கு பூட்டப்பட்டு, கைதியாகி வருகின்றான் கொலம்பஸ்! அவன் மனநிலை எப்படி இருந்திருக்கும்! என்னென்ன காட்சிகள் மனக் கண்முன் தோன்றி மறைந்திருக்கும். அவன் உள்ளம் உரம் படைத்தவன், எனவேதான், அவனால், அந்த அக்ரமத்தைச் சகித்துக் கொள்ள முடிந்தது. உள்ளத்தில் உறுதி குறைந்தவர்கள், அப்போதே மனம் உடைந்து மாண்டிருப்பர், கலத்திலேயே. கொலம்பஸ், கையிலே இருந்த விலங்கைக் கண்டான், கலங்களுக்குக் காவலனாகச் சென்றவன் கைதியாகக் கலத்திலே கொண்டு வரப்படுவதைக் கண்டான்–முன்பு நடைபெற்ற விருந்து, வைபவம் ஆகியவைகளை எண்ணினான்–நாட்டிலே, இப்படிக் காட்டு முறையும் இருக்கிறதல்லவா என்று எண்ணினான். பாவம்! அவனுக்குக் கண்ணீர் வடிக்கவும் நேரமிருந்திருக்காது; அலை அலையாக எண்ணங்கள் கிளம்பியபடிதான் இருந்திருக்கும்.

பார்சிலோனாவில் எப்படிப்பட்ட வரவேற்பு!

ராஜ சபையிலே எத்தகைய உபசரிப்பு!

இப்போது, கடலிலே, கலத்திலே கைதி! கரங்களிலே விலங்கு!

கலத்தைச் செலுத்தினவனால் இந்தக் காட்சியைக் காணச் சகிக்கவில்லை. அவன் 'தலைகளை எடுத்து விடுகிறேன்' என்று கூறினான் கொலம்பசிடம்.

''என்ன காரியமப்பா செய்யத் துணிகிறாய்! ஸ்பெயின் நாட்டு மன்னனின் நன்றி காட்டும் நற்குணத்துக்குச் சிறந்த சான்றல்லவா, இந்த இரும்பாரம்! இதை எடுத்து விடுவதா? கூடாது, கூடாது! என் கரங்களிலே, இந்த இரும்பாரம் இருக்கட்டும், மரண பரியந்தம். நான் இந்த விலை மதிக்கொணாத பரிசை, இழக்கமாட்டேன். மாநிலத்தில், யாருக்குக் கிடைக்கும் இப்படிப் பட்ட பரிசு!–இரும்பாரம்'' என்று கூறிக் கடைசிவரை, அதை எடுக்க மறுத்துவிட்டான்.

கலம், துறைமுகம் வந்து சேர்ந்தது. 'சேதி' ஊரெங்கும் பரவிற்று.

'கொலம்பசுக்கு விலங்கிட்டார்களாம்!' – கடலை அடக்கினோனுக்குக் கரத்திலே விலங்கு!

'கொலம்பஸ் கைது செய்யப்பட்டான்.'

'ஸ்பெயின் நாட்டுப் புகழ் பரப்பியவனுக்கா, இந்தத் தண்டனை?'

'நமது கொடியை, திக்குத் தெரியாத இடத்திலெல்லாம் பறக்கவிட்டவனையா, இப்படி அவமதிப்பது?'

'இது என்ன அக்ரமம்!'

'ஏன் இந்த அநீதி!'

'கொலம்பசுக்கா, விலங்கு!!'

மக்கள் மனம் துடிதுடிக்கலாயிற்று – முழக்கமிடலாயினர்! கோபிக்கலாயினர்! ஸ்பெயின் முழுவதும் கோபாவேசம்! கொலம்பசுக்கு விலங்கு! கொலம்பஸ் கைதியாக்கப்பட்டான்! கொடுமை, கொடுமை! என்ற கூக்குரல் எங்கும் கிளம்பிற்று – வலுத்துக் கொண்டே இருந்தது – மன்னன் மனதையும் அரசியின் அவசரத் தீர்ப்பையும், மக்கள் எதிர்த்தனர்! மன்னன், மக்களின் முழக்கத்தைக் கண்டான்–கொதிப்பின் காரணத்தை உணர்ந்தான்.

கொலம்பசை விடுதலை செய்க! என்று உத்தரவிட்டான். கொலம்பஸ் குற்றமற்றவன் என்று கூறினான். கொலம்பசுக்கு பரிசளிக்கப்படும் என்றான்–அளித்தான். மக்கள் வென்றனர் – மாவீரன் விடுதலை செய்யப்பட்டான் – மன்னன் கொலம்பசின் மீது பொறாமைக்காரர்கள் பூசிய தூசைத் துடைத்தான்.

'கொலம்பஸ் நிரபராதி!' – மக்களின் தீர்ப்பு! மன்னனும் அதை அங்கீகரித்தான். கொலம்பஸ் நிம்மதியை இழந்தான்! மன்னனோ, மக்களோ, அதை அறியவில்லை.

கொலம்பஸால் பெர்டினாண்டுக்கு இலாபமா? பெர்டினாண்டால் கொலம்பசுக்கு இலாபமா? – இதை அல்லவா, விஷமிகள் பிரச்னையாக்கினர் – மக்கள் ஏன் அதற்கு இடமளித்தனர்? பிரச்னை அதுதானா!

கொலம்பஸால் பெர்டினாண்டுக்கு இலாபமா? பெர்டினாண்டால் கொலம்பசுக்கு இலாபமா? – இதை அல்லவா, விஷமிகள் பிரச்னையாக்கினர் – மக்கள் ஏன் அதற்கு இடமளித்தனர்? பிரச்னை அதுதானா!

கொலம்பஸ், பெர்டினாண்டு – இருவரும் காலத்தின் சின்னங்கள். பெர்டினாண்டு, அஞ்சா நெஞ்சம் படைத்த ஆராய்ச்சியாளர்களை ஆதரிக்கும் காலப்போக்கின் சின்னம்; கொலம்பஸ்–புதிய இடங்களைக் கண்டறிய எவ்விதமான கஷ்டத்தையும் ஏற்கத் துணியும் காலப்போக்கின் சின்னம்! இதை ஏன் மக்கள் உணரவில்லை?

முடிதரித்த பெர்டினாண்டும், மரக்கலமேறிய கொலம்பசும், நிரந்தரமல்ல–ஆனால் அவர்களின் கூட்டுறவால் கிடைத்த புதிய

நாடுகள்! அவை நிரந்தரம்! ஏன் மக்கள் இதனை எண்ணிப் பார்க்கவில்லை.

யாரால், யாருக்கு இலாபம்?–ஏன், மக்கள் இந்த விபரீதக் கணக்குப் போட்டனர்? தெளிவாகத் தெரிவதும், மறுக்க முடியாததுமான, வேறோர் கணக்கு இருக்கிறதே! கொலம்பசும் பெர்டினாண்டும் கூடிப் பணி செய்ததால், புதிய ராஜ்யமல்லவா கிடைத்தது. ஸ்பெயினுக்கு – புதிய பிரதேசங்களல்லவா தெரிந்தது உலகுக்கு – இலாபம் அதுதானே – அந்தக் கணக்கை ஏன் மறந்தனர் அந்த இலாபம் கெடும்படியான காரியத்தில் ஏன் ஈடுபட்டனர்? கடலில் செல்லும் கலம்! கடலால் கலம் பயன் பெறுகிறதா, கலத்தால் கடல் பயன் பெறுகிறதா என்பதா பிரச்சனை? மக்கள் இதையன்றோ பிரச்னையாக்கினர் கூட்டுறவு கெட வேலை செய்தனர்.

கொலம்பசின் மனதிலே இந்தக் கருத்துகள் புகுந்து குடையலாயின. அவனுடைய பழைய உற்சாகம் பாழ்பட்டது. மீண்டும் கடைச் சென்றான்; மேலும் சில இடங்களைக்கூடக் கண்டுபிடித்தான் – ஆனால் பழைய கொலம்பசல்ல! பழைய கொலம்பசை, ஸ்பெயின் நாட்டு வேந்தராவது நம் திட்டத்தை ஏற்றுக்கொண்டு ஆதரித்தாரே என்று பெருமகிழ்ச்சியுடன் பணியாற்றி வந்த பழைய கொலம்பசைச் சாகடித்து விட்டார்கள்!

பொன்னாடை! இரும்பாரம்! – ஒருவனின் வாழ்நாளில் இரு நிலையையும் கண்டாகிவிட்டது. கைலாகு கொடுத்த அரசியாரையும் கண்டாகிவிட்டது. 'கைலாகு விலங்கிட்டு இழுத்துவா, அவனை' என்று கட்டளை பிறப்பித்த அரசியாரையும் கண்டாகி விட்டது. வாழ்க்கையிலே ருசி இல்லை. நடமாடிக் கொண்டுதான் இருந்தான், ஐம்பதாண்டுகள் முடியு மட்டும் – ஆனால் பழைய கொலம்பசின், நிழல்போல்! வறுமை வந்துற்றது. வாட்டம் பிடித்தாட்டிற்று. நாலுபேர் முன்னிலையில் வருவதுமில்லை. தனியனானான் கொலம்பஸ். 1506ஆம் ஆண்டு இறந்தான். இறக்கும் வரையில், அவன் அந்த இரும்பாரத்தை மட்டும் இழந்து விடவில்லை! எத்தனை இரவுகள், அந்த இரும்பாரத்தின் மீது, அவனுடைய கண்ணீர் சிந்திற்றோ. யார் கண்டார்கள்! இறக்கும்போது, அவன் கேட்டுக் கொண்டபடி, அந்த இரும்பாரம் அவனுடன் சேர்த்துப் புதைக்கப்பட்டது.

**13-6-1948**

❄ ❄ ❄ ❄ ❄